மலர் 14 இதழ் 243

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 20 காசு விமானப் பதிப்பு 25 காசு

Regd. M No 7897

Phone No. 76190, 76195

மந்திரிகளுக்கு
கருணாநிதி யோசனை
3-ம் பக்கம்

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 17-5-74 வெள்ளி

வெளியூர் 18-5-74 சனி



## அ. தி. மு. க. மாநில அமைப்பாளர்

# கிருஷ்ணசாமி கைது ஆவார்

## கருணாநிதியைக் கொலை செய்யத் தூண்டியதாக

சென்னை, மே 17—தி. மு. கழகத் தலைவர் முதல்வர் கருணாநிதியை கொலை செய்யத் தூண்டியதாக, அ. தி. மு. க. மாநில அமைப்பாளர் கே. ஏ. கிருஷ்ணசாமி கைது செய்யப்படுவார் என்று தெரிகிறது.

கருணாநிதியைக் கொலை செய்யத் தூண்டும் விதத்தில் நேற்றிரவு நடந்த அ. தி. மு. க. பொதுக்கூட்டத்தில் கே. ஏ. கிருஷ்ணசாமி பேசியதுபற்றி போலீஸ் கமிஷனர் ஷெனாயிடம் கேட்டபோது, இதுபற்றி கிருஷ்ணசாமிமீது நடவடிக்கை எடுக்கப்படுமென்று தெரிவித்தார்.

நேற்று இரவு சென்னை சிவசண்முகபுரத்தில் நடைபெற்ற அ. தி. மு. க. பொதுக்கூட்டத்தில் கே. ஏ. கிருஷ்ணசாமி பேசும்போது, தி. மு. கழகத் தலைவர் முதல் அமைச்சர் கருணாநிதியை மிகக் கடுமையாகவும், கேவலமான முறையிலும் பேசினார்.

"கருணாநிதியின் பிறப்பு சர்ச்சைக்குள்ளாகி இருக்கிறது" என்றும், "இனிமேல் கருணாநிதி கலந்துகொள்ளும் கூட்டங்களில் வேசி மகனே திரும்பிப்போ என்று போர்டு எழுதி வைப்போம்" என்றும் கிருஷ்ணசாமி ஆவேசமாகக் கூறினார்.

### தலையைக் கொய்துவர எம். ஜி. ஆர். ஆணையிட்டால்

"புரட்சித் தலைவர் ஆணையிட்டால் கருணாநிதியின் தலையைக் கொய்துவர இளைஞர்படை தயாராக இருக்கிறது" என்றும் கிருஷ்ணசாமி மிகுந்த ஆவேசத்துடன் கூறினார்.

இதுபற்றி இன்று சென்னை நகர போலீஸ் கமிஷனர் ஷெனாயிடம் ஒரு பத்திரிகை நிருபர், கிருஷ்ணசாமியின் கேவலமான பேச்சையும், ஆவேசத் தூண்டுதலையும் சுட்டிக்காட்டினார்.

ஷெனாயிடம் அந்த நிருபர் கேட்ட விவரம் வருமாறு;—

"நேற்று இரவுநடைபெற்ற ஒரு அதிமுக பொதுக் கூட்டத்தில் அ. தி. மு. க. அமைப்பாளர் கே. ஏ. கிருஷ்ணசாமி புரட்சித்தலைவர் ஆணையிட்டால்கருணாநிதியின் தலையைக் கொய்துவர இளைஞர் படை தயாராக இருப்பதாகப் பேசியிருக்கிறார்.

இதேபோலமுன்பு நேருவை கொலை செய்யத் தூண்டுவது போல, தற்போதைய தி. மு. கழக எம். எல். ஏ. அரங்கண்ணல் தமது பத்திரிகையில் ஒரு கார்ட்டூன் வெளியிடப்பட்டிருந்ததற்கு, அரங்கண்ணல் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டது.

அதே போல கிருஷ்ணசாமியும் கருணாநிதியை கொலை செய்யத் தூண்டும் விதத்தில் பேசியிருக்கிறார். எனவே அவர் மீது நடவடிக்கை எடுக்கப்படுமா?"

மேற்கண்டவாறு அந்த நிருபர் கேட்டார்.

இதற்குபோலீஸ் கமிஷனர் ஷெனாய் பதில் அளித்தபோது ஆமாம் அவர் அப்படிப் பேசியிருக்கிறார். அவர் மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்று கூறினார்.

எனவே கருணாநிதியைக் கொலை செய்யத் தூண்டிய குற்றத்திற்காக கிருஷ்ணசாமி கைது செய்யப்படலாம் என்று தெரிகிறது.

### ஓட்டல் லைசென்ஸ் ரத்து செய்யப்பட்டது:

## விபசாரம் செய்ததாக 14 பேர் கைது

சென்னை, மே 17—சில குறிப்பிட்ட ஓட்டல்களில் விபசாரம் செய்ததாக சென்னையில் 14 பெண்களை போலீசார் கைது செய்துள்ளனர்.

இந்தப் பெண்கள்விபசாரம் செய்யத் தரகர்களாக இருந்த 6 பேர்களையும் போலீசார் கைது செய்துள்ளனர். இதன் காரணமாக விபசாரம் நடத்துவதற்கு இடம் கொடுத்த சில குறிப்பிட்ட ஓட்டல்களின்லைசென்ஸ்களும் ரத்து செய்யப்பட்டுள்ளன.

போலீசார் தொடர்ந்து பல ஓட்டல்களில் விசாரணை செய்து வருகின்றனர்.

இந்தத் தகவலை சென்னை நகர போலீஸ் கமிஷனர் ஷெனாய் இன்றுநிருபர்களிடம் தெரிவித்தார்.

### வீட்டில் படுத்துத் தூங்கிய

## ரெயில் ஊழியரை உயிரோடு கொளுத்த பயங்கர முயற்சி

சென்னை,மே17—படுத்துத்தூங்கிக்கொண்டிருந்த ரெயில்வே தொழிலாளி மீது மண்ணெண்ணெய் ஊற்றி தீவைத்து கொளுத்த முயன்ற சம்பவம் நடைபெற்றிருக்கிறது.

இந்தத் தகவலை, தென் ரெயில்வே துணை ஜெனரல் மானேஜர் தேவநாதன் இன்று நிருபர்களிடம் வெளியிட்டார்.

இதுபற்றி அவர் மேலும் கூறியதாவது:

ஆவடியைச் சேர்ந்த ரெயில்வே ஊழியர் சி. கண்ணன்என்பவர் நேற்று தனது வீட்டில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தபோது, இரவு 8 மணியளவில் யாரோ சிலர் அவர் மீது மண்ணெண்ணெயை ஊற்றி தீவைத்துவிட்டு ஓடியிருக்கின்றனர்.

இதனால் அவருடைய முகம், மார்பு, முழங்கால் ஆகிய இடங்களில் கடுமையான தீக்காயங்கள் ஏற்பட்டன. பெரம்பூர் ரெயில்வே ஆஸ்பத்திரியில் அவர் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார். போலீசார் தீவிர புலன் விசாரணை செய்து வருகின்றனர்.

### ஸ்டேஷன் மாஸ்டர்மீது தாக்குதல்

ஷோரனூர்—மங்களூர் பிரிவில் உள்ள கண்ணபுரம் என்ற ரெயில் நிலையத்தில் ஸ்டேஷன் மாஸ்டர் தாக்கப்பட்டார். அவருக்கு தலையில் பலமாக அடிபட்டிருக்கிறது. இந்த சம்பவம் இன்று காலை 6-30 மணிக்கு நடைபெற்றது.

### ரெயில்பாதையில் நாசவேலை

அரக்கோணம்—தக்கோலம் இடையேயுள்ள ரெயில்பாதையில தண்டவாளம் பெயர்க்கப்பட்டிருந்தது. பெயர்க்கப்பட்ட நான்கு பிஷ்பிளேட்டுகளும்,ஆணிகளும் அங்குகிடைந்ததை எல்லப்பன் என்னும் ரெயில்வேதொழிலாளிஇன்று காலை 7 மணிக்கு கண்டுபிடித்தார்.

இந்தத் தகவல்களை தென் பகுதி ரெயில்வே துணை ஜெனரல் மானேஜர் தேவநாதன் இன்று நிருபர்களிடம் தெரிவித்தார்.

5-ம் பத்தித் தொடர்ச்சி

வாய்ப்பு இல்லையா என்று நிருபர்கள் கேட்டதற்கு ரெயில் பாதைகளில் நாசவேலைகள் நடக்கக் கூடும் என்பதால் கவனித்து வடவேண்டியிருக்கிறது என்று பதிலளித்தார்.

இன்று சென்ட்ரல் ரெயில் நிலையத்திலிருந்து 11 ரெயில்கள் புறப்பட்டுச் சென்றன; 12 ரெயில்கள் வந்து சேர்ந்தன. அவை 1 மணிமுதல் 13 மணி நேரம் வரை தாமதமாக வந்து சேர்ந்தன.

இவ்வாறு ஜெனரல் மானேஜர் கூறினார்.

### கல்யாணசுந்தரம் கேள்வி

## "என்னை கைது செய்யாமல் ரெயில் தொழிலாளர்களை கைது செய்வது ஏன்?"

சென்னை, மே 17—"வேலைக்குப் போகாதே" என்று கூறும் என்னை தமிழக அரசு கைது செய்யட்டுமே ரெயில்வே தொழிலாளர்களைக் கைது செய்வானேன்?" என்று வலது கம்யூனிஸ்டு தலைவர் கல்யாணசுந்தரம் கேட்டுள்ளார்.

கைது செய்யப்பட்டுள்ள ரெயில்வே தொழிலாளர்கள் மீது தெளிவில்லாமல் ஏதேதோ குற்றங்கள் சுமத்தப்பட்டுள்ளன என்றும் அவர் சொன்னார்.

ரெயில்வே தொழிலாளர் மீது சுமத்தப்பட்டுள்ள சில குற்றச்சாட்டுகளை நிருபர்களிடம் கல்யாணசுந்தரம் படித்துக் காட்டினார்.

"கூட்டத்தில்பேசியதையும், கம்யூனிஸ்டு தலைவரை சந்தித்ததையும், வேலை நிறுத்தத்தில் பங்கு கொண்டதையும் குற்றங்களாகக் கருதி ரெயில்வே தொழிலாளர்மீது குற்றம் சாட்டியுள்ளனர்." என்று கல்யாணசுந்தரம் கூறினார்.

தமிழ்நாட்டில் உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டப்படி 119 ரெயில்வே தொழிலாளர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர். இவர்கள் மீதான குற்றச்சாட்டுகள் மழுப்பலானவை என்றும் அவர்சொன்னார்.

"வேலைக்குப் போகவேண்டாம்;வேலை நிறுத்தம் செய்ய வேண்டும்" என்றெல்லாம் நான் கூறி வருகிறேன். எனினும் என்னைக் கைது செய்ய முன்வரவில்லை. அப்பாவி ரெயில்வே ஊழியர்களைக் கைது செய்து வருகின்றனர் என்றும் கல்யாணசுந்தரம் கூறினார்.

அவர் மேலும் பேசுகையில் நாடு பூராவிலும் 30 ஆயிரம் பேர் கைது செய்யப்பட்டுள்ளனர். மத்திய அரசு நிபந்தனையற்ற சரணாகதியை எதிர்பார்க்கிறது. மத்திய அரசு எவ்வளவு பிடிவாதமாக இருந்தாலும் ஸ்டிரைக் பிசுபிசுத்துப் போகாது. நாங்கள் ஸ்டிரைக்கை வாபஸ் பெற்றால்தான் சகஜநிலை ஏற்படும் என்றும் கூறினார்.

கே. டி. கே. தங்கமணி, பார்த்தசாரதி, பக்தவத்சலம் ஆகியோர்சிறையில் அடைத்து வைக்கப்பட்டுள்ள ரெயில்வே ஊழியர்களை சென்று பார்த்தனர்.

### சவாலை ஏற்கிறேன்

நிருபர்களிடம் கல்யாணசுந்தரம் மேலும் கூறியதாவது:—ரெயில்வே தொழிலாளர்களுக்கு சம்பளம் அளிக்கப்படவில்லை என்ற குற்றச்சாட்டை தென் பிராந்திய ரெயில்வே ஜெனரல் மானேஜர் மறுத்து இருப்பதை ஒரு சவால் என்றால் அச்சவாலை நான் ஏற்றுக்கொள்ளத் தயார்.

நேற்றிலிருந்து அவர்களுடைய உத்தியில் சில மாறுதல்கள்ஏற்பட்டுள்ளன. சம்பளம் அளிக்கத் துவக்கியிருக்கிறார்கள். சம்பளம் வாங்கவரும் தொழிலாளர்களை உள்ளே அழைத்துச் சென்று நாள் முழுக்க காக்கவைத்து ஒரு சிலருக்கு மட்டும் சம்பளம் கொடுத்திருக்கிறார்கள்.

பெரும்பான்மையானவர்களிடம் வருகிற திங்கட்கிழமை வருமாறு கூறியிருக்கிறார்கள். பெரம்பூரில் 2500 தொழிலாளர்களை உள்ளே அழைத்துச் சென்று 500 பேருக்குமட்டும் சம்பளம் கொடுத்துவிட்டு மற்ற 2000 பேரிடமும் திங்கட்கிழமை வருமாறு கூறிவிட்டார்கள்.

### தந்திரத்தில் மாற்றம்

அப்படி உள்ளே வந்தவர்களை வேலைக்கு ஆஜர் ஆனதாகவும் கணக்குக் காட்டுகிறார்கள்.

ரெயில்வே அதிகாரிகளின் தந்திரத்தில்தான் மாற்றம் இருக்கிறதே தவிர, நோக்கத்தில் மாறுதல் இல்லை.

சம்பளம்வாங்கச் செல்பவர்களை "சம்பளம் வாங்காதே" என்று தொழிற்சங்கத் தலைவர்கள் மிரட்டுவதாகச் சொல்வது தவறு. மறைமுகமாக சிருஷ்டிக்கப்பட்ட கற்பனை அது. தேவைப்பட்டால் சம்பளப்பட்டுவாடா செய்யப்படும் இடங்களுக்கு எங்களுடைய தொண்டர்களை அனுப்பி சம்பளம் வாங்குவதற்குஉதவிசெய்யத்தயார்.

## ரயில்வே ஸ்டிரைக்: இதுவரை 1909 பேர் கைது

சென்னை, மே 17—ரெயில்வே ஸ்டிரைக் தொடர்பாக இதுவரை கைதானவர்கள் 1909 பேர். இந்தத் தகவலை போலீஸ் கமிஷனர் ஷெனாய் இன்று தெரிவித்தார்.

### ரெயில்வே அதிகாரி பேட்டி:

## 65 சதவித ரெயில்கள் ஓடுகின்றன

சென்னை, மே 17—வேலை நிறுத்தத்துக்கு முன் ஓடிய ரெயில்கள் எண்ணிக்கையில் 65 சதவிகித எக்ஸ்பிரஸ் ரெயில்கள் இப்பொழுதுவிடப்படுகின்றன என்று, தென் பகுதி ரெயில்வே ஜெனரல் மானேஜர் வி. ராமநாதன் கூறினார்.

மேலும் கூடுதலாக விட

1-ம் பத்தி பார்க்க

## தி. மு. க. தொழிற்சங்க தலைவர் தாக்கப்பட்டார்: அ. தி. மு. க. மீது புகார்

சென்னை, மே 17—தி. மு. க. தொழிற்சங்கத் தலைவர் அன்புகண்ணனை கொலை செய்ய பயங்கர முயற்சி ஒன்று நடைபெற்றிருக்கிறது. முயற்சித்தவர்கள் அ. தி. மு. க. வைச் சேர்ந்தவர்கள் என்று கூறப்படுகிறது.

இதுகுறித்த விவரமாவது:-

அன்புக்கண்ணன் திருவொற்றியூர் நகரச் செயலாளராக இருந்து வருகிறார். பல தொழிற்சங்கங்களுக்கும் இவர் தலைவராக இருக்கிறார். இவர் தி. மு. க. பொதுக்குழு உறுப்பினருமாவார். இவரது வீடு திருவொற்றியூரில் இருக்கிறது

கடந்த 15-ம் தேதி இரவு மணிக்கு இவர் வெளியில் சென்றிருந்த போது, சில குண்டர்கள் இவரது வீட்டில் புகுந்தனர்

வீட்டிலிருந்த அன்புக்கண்ணனின் மனைவி, மைத்துனிகள், மாமியார், மாமனார், மற்றும் வேலையாட்களை குண்டர்கள் தாக்கியிருக்கின்றனர் பெண்களை மயிரைப் பிடித்து இழுத்து ரோடில் தள்ளி வெறித்தனமாகத் தாக்கிக் காயப்படுத்தினர்.

### வெட்டு, கொல்லு

இந்தத் தாக்குதல் நடைபெற்றுக் கொண்டிருந்த போது. அன்புக் கண்ணன் வீட்டிற்குத் திரும்பிவந்தார், உடனே குண்டர்கள் அவரை கொலை செய்யும் நோக்குடன் தாக்க முயன்றனர்

கத்தி, அரிவாள் போன்ற பயங்கர ஆயுதங்களை வைத்துக் கொண்டு, "வெட்டு கொல்லு" என்று கூச்சலிட்டுக் கொண்டு அன்புக் கண்ணனைத் தாக்கினர். இதனால் அன்புக் கண்ணனுக்குப் பலத்த காயம் ஏற்பட்டு மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருக்கிறார்.

குண்டர்களின் தாக்குதலுக்கு உள்ளான அன்புக் கண்ணனின் மாமியாருக்கும் பலத்த காயம் ஏற்பட்டிருக்கிறது. இவரும் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருக்கிறார்.

நகர அ. தி. மு. க. அமைப்பாளர் துலுக்கானத்துடன், மற்றும் 6பேர் சேர்ந்து தம்மைத் தாக்கியதாகவும், இவர்கள் அ.தி.மு.க. வைச்சேர்ந்தவர்கள் என்றும் அன்புக்கண்ணன் போலீசில் புகார் செய்திருக்கிறார்.

## எனக்கும் மானம் ரோஷம் இருக்கிறது: சத்தியவாணி பேட்டி

சென்னை, மே 17—"எனக்கும் மானம்-ரோஷம் இருக்கிறது அரசாங்க வீட்டில் நீண்ட நாட்கள் தங்கியிருக்க வேண்டும் என்பது எனது விருப்பமல்ல. வேறு வீடு கிடைக்காததாலேயே வீட்டைக் காலி செய்யாமல் இருக்கிறேன்" என்று சத்தியவாணிமுத்து இன்று நிருபர்களிடம் கூறினார்.

தமதுவீட்டில்இருக்கும் அரசாங்க சாமான்களை (மேஜை-நாற்காலிகள்) எடுத்துச் செல்லப் போவதாகவும், இவை மற்ற இரண்டு அமைச்சர்களுக்குத் தேவைப்படுவதாகவும் அரசாங்க அதிகாரிகள் தெரிவித்திருப்பதாக சத்தியவாணி முத்து கூறினார்.

தாம் குடியிருக்கும் வீடு, மதியழகனுக்கு ஒதுக்கப்பட்டிருப்பதாகவும் அதிகாரிகள் தெரிவித்திருக்கின்றனராம்.

எனக்கும் மானம்-ரோஷம் இருக்கிறது; இங்கே அரசாங்க வீட்டில் நீண்ட நாட்கள் குடியிருக்க வேண்டுமென்று எனக்கு விருப்பமில்லை. வேறு வீடு பார்த்துக் கொண்டிருக்கிறேன். கிடைத்ததும் காலி செய்து விடுவேன் என்றார் சத்தியவாணிமுத்து. இது குறித்து தலைமைச் செயலாளருக்கு எழுதியிருப்பதாகவும் இன்னும் பதில் வரவில்லை என்றும் அவர் கூறினார்.

அரசாங்கப் பொருட்களை எப்போது வேண்டுமானாலும் எடுத்துச் செல்லலாம் என்று தாம் அதிகாரிகளிடம் தெரிவித்ததாகவும் அவர் கூறினார்.

தமது சொந்த வீட்டை காலிசெய்ய அதில் குடியிருப்பவர் மறுத்து வருவதாகவும், அவருக்கு வக்கீல் நோட்டீஸ் அனுப்பப்பட்டிருப்பதாகவும் அவர் தெரிவித்தார்.

### கண்ணதாசனுக்கு பதில்

சத்தியவாணிமுத்து பற்றி ஒரு பத்திரிகையில் கண்ணதாசன்எழுதியிருப்பதுகுறித்து கேட்டதற்கு, கண்ணதாசனைப் பற்றி மக்களுக்கு நன்றாகத் தெரியும். அப்படிப்பட்டவருக்குப் பதில் சொல்ல நான் விரும்பவில்லை. தமிழ்நாட்டில் ஒரு நாகரிகமான அரசியலை நடத்த நான் விரும்புகிறேன். அரசியல் ரீதியான பிரச்சினைகளாக இருந்தால் பதில் சொல்லியிருப்பேன் என்றார் சத்தியவாணி முத்து.

# வங்காளதேஷுக்கு ரூ. 41 கோடி கடனுதவி: இந்தியா அளிக்கும்

**புதுடெல்லி, மே 17— வங்காளதேஷ் நாட்டுக்கு இந்தியா ரூ. 41 கோடி கடனுதவி அளிக்கும். இதற்கான 3 ஒப்பந்தங்கள் டெல்லியில் கையெழுத்தாகின.**

இந்தியாவிலிருந்து ரெயில் பெட்டிகள், ரெயில்வாகின்கள், மின்சாரக் கம்பிகளை அமைப்பதற்கான தூண்கள், மின்சார வினியோக சாதனங்கள், விவசாய யந்திர சாதனங்கள், தேயிலை, சணல், சிமெண்ட் ஆலைகளுக்கான யந்திர சாதனங்கள் முதலியவற்றை வாங்கிக்கொள்வதற்காக இக்கடனுதவி அளிக்கப்படுகிறது. தவிர, வங்காளதேஷ் இக்கடனுதவியைப் பயன்படுத்தி இந்தியாவிலிருந்து ஜவுளி ஆலை யந்திரங்களை வாங்கி ஒரு ஜவுளி ஆலையை அமைத்துக்கொள்ளும்.

இந்த ரூ. 41 கோடி கடனுதவியில் இந்திய அரசாங்கம் ரூ. 16 கோடியைஅளிக்கிறது. மீதி ரூ. 25 கோடியை இந்திய அரசு அமைத்துள்ள இந்திய தொழிலியல் அபிவிருத்தி பாங்கு அளிக்கும்.

இரு நாடுகளும் நான்கு தொழிற்சாலைகளை அமைக்கவும் ஒப்புக்கொண்டுள்ளன. இவற்றில் இரு தொழிற்சாலைகள் வங்காளதேஷிலும் மற்றும் இரு தொழிற்சாலைகள் இந்தியாவிலும் அமைக்கப்படும்.

வங்காளதேஷில் சடாக் என்னுமிடத்தில் சிமெண்ட் ஆலை ஒன்று அமைக்கப்படும். இந்த ஆலை இந்தியாவில் மேகாலயாவில் கிடைக்கும் சுண்ணாம்புக் கல்லைப் பயன்படுத்தும். சிமெண்ட் ஆலைக்கான பொருளை அளிக்க மேகாலயாவில் ஒரு தொழிற்சாலை அமைக்கப்படும். இந்தியாவுக்கு யூரியா உரம் அளிக்க வங்காளதேஷில் ஒரு தொழிற்சாலை அமைக்கப்படும். வங்காளதேஷில் மென் இரும்பு தொழிற்சாலை அமைக்கப்படும். இதற்கான இரும்புக் கனியை இந்தியா அளிக்கும்.

## முஜிப்-இந்திரா ஒப்பந்தம்

இந்தியா — வங்காளதேஷ் எல்லைகளில் சிறிய மாறுதல்களைச் செய்து எல்லையை நிர்ணயிப்பது குறித்து நேற்று இந்திராவும் - முஜிபுர் ரகிமானும் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர்.

இந்த ஒப்பந்தம் எல்லைப் பகுதியில் உள்ள 130 திட்டுப் பகுதிகள், 95 வங்காளதேஷ் திட்டுப் பகுதிகள் ஆகியவை சம்பந்தப்பட்ட பிரச்னைகளைத் தீர்த்துவைக்கும்

இரு நாடுகளுக்கும் இடையிலும் ஒத்துழைப்பை அதிகரிப்பதற்காக கமிட்டிகள் அமைக்கப்பட்டுள்ளன. இது இரு பிரதமர்களும் வெளியிட்ட கூட்டறிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

டென்னிஸ் போட்டி

# இந்தியா வெற்றி: கருணாநிதி பாராட்டு

கல்கத்தா, மே 17— டென்னிஸ் ஆட்டத்தில் வல்லமை படைத்த ஆஸ்திரேலியாவை இந்தியா தோற்கடித்துள்ளது.

டேவிஸ் கோப்பைக்கான உலக டென்னிஸ் போட்டியில் கிழக்குப் பிராந்திய இறுதிக் கட்டத்தில் ஆஸ்திரேலியாவை இந்தியா இவ்விதம் தோற்கடித்தது. மொத்தம் 5 ஆட்டங்களில் இந்தியா மூன்றில் வென்றது. ஆஸ்திரேலியா இரண்டு ஆட்டங்களில் வெற்றி பெற்றது.

இப்போட்டியில் இந்தியாவின் சார்பில் சென்னையைச் சேர்ந்த விஜய் அமிருதராஜ் ஆனந்த் அமிருதராஜ் சகோதரர்களும் ஜஸ்ஜித் சிங்கும் ஆடினர். விஜய், ஆனந்த் ஆகிய இருவரும் அற்புதமாக ஆடியதன் பலனாகவே இந்தியா வெற்றி பெற்றது.

குறிப்பாக இரட்டையர் ஆட்டத்தில் இந்த இரு சகோதரர்களும் அபாரமாக ஆடி இந்தியாவின் வெற்றிக்கு வழி வகுத்தனர்.

பிரபல டென்னிஸ் சாம்பியன் ஆர். கிருஷ்ணன் இந்தியக் கோஷ்டியின் தலைவர்.

இந்தியா வெற்றி பெற்றுள்ளதைப் பாராட்டி டென்னிஸ் வீரர் கிருஷ்ணனுக்கு முதலமைச்சர் கருணாநிதி பாராட்டுச் செய்தி அனுப்பியுள்ளார்.

ஆஸ்திரேலியாவை தோற்கடித்து இந்தியா வெற்றி பெற்றுள்ளதற்காக என் பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். உங்கள் தலைமையில் ஆடிய தமிழ் நாட்டு இளைஞர்கள் பிரமாதமாக ஆடியதன் பலனாகவே இப்பிரமாத வெற்றி கிடைத்துள்ளது என்பதால் நான் மகிழ்ச்சி அடைகிறேன். மேலும் வெற்றிகளைப் பெறுக என்று அச்செய்தியில் கருணாநிதி குறிப்பிட்டுள்ளார்.

# மந்திரி சபையில் இடம்: கிறிஸ்தவ சங்கம் கோரிக்கை

சென்னை, மே 17—தமிழ் நாட்டு அமைச்சரவையில் கிறிஸ்தவர்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும் என்று கோரப்பட்டுள்ளது.

இது பற்றி சென்னை பறங்கிமலையில் உள்ள கிறிஸ்தவர் உரிமைச்சங்கம் விடுத்துள்ள அறிக்கையில் கூறப்பட்டிருப்பதாவது:—

தமிழ்நாடு அமைச்சரவையில் அண்மையில் இரு புதிய அமைச்சர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கின்றனர். ஆனால்ஒருகிறிஸ்தவரைக்கூட தமது அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ள முதலமைச்சருக்கு மனம் வரவில்லை.

முப்பது லட்சம் கிறிஸ்தவர்கள் தமிழ்நாட்டில்உள்ளனர். இருந்தும் 16 அமைச்சர்களைக் கொண்ட தமிழ்நாடு அமைச்சரவையில் ஒரு கிறிஸ்தவருக்கு இடமில்லை. கிறிஸ்தவர்களுக்கு பிரதிநிதித்துவம் அளிக்கத் தவறினால் கிறிஸ்தவ மக்கள் நேரடிப்போராட்டத்தில் குதிக்கத் தயாராயிருக்கிறார்கள்,

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

ரெயில்வே ஸ்டிரைக்

# அடக்குமுறையை எதிர்த்து அடுத்த கட்ட போராட்டம்: போராட்டக் குழு முடிவு

**புதுடெல்லி, மே 17—இந்த மாதம் 21-ந் தேதியன்று "அடக்குமுறை எதிர்ப்பு நாள்" பின்பற்றப்படவேண்டும் என்று மத்திய தொழிற் சங்கங்கள் தீர்மானித்துள்ளன.**

இந்த மாதம் 8-ந் தேதியன்று ஆரம்பமான ரெயில்வே ஊழியர்களின் வேலை நிறுத்தப்போராட்டத்தில் சமரசம் பேச்சு மூலம் தீர்வு காணும்படி அரசாங்கத்தை நிர்ப்பந்திக்க வேண்டும் என்றும் அதற்காக 21-ந் தேதியன்று நாடு பூராவிலும் அடக்குமுறை எதிர்ப்பு நாள் பின்பற்றப்படவேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

ஜனதிபதியின் ஆலோசனைக்கிணங்க ரெயில்வே ஊழியர்களின் கோரிக்கைகள் குறித்து உடனே சமரசப்பேச்சுநடத்த மத்திய அரசு முன்வரவேண்டும்என்று போராட்டக்குழு நேற்று தெரிவித்தது. மத்திய தொழிற்சங்கங்கள் அந்த வேண்டுகோளுக்கு ஆதரவு தெரிவித்தன.

ரெயில்வே தொழிலார் போராட்டக் குழுவுடன் 9 எதிர்க்கட்சித் தலைவர்கள் நேற்று சந்தித்துப் பேசிய பிறகு இது சம்பந்தமாக ஒரு அறிக்கைவெளியிடப்பட்டது.

அறிக்கையில் கையெழுத்திட்ட 9 எதிர்க்கட்சி தலைவர்கள் பின்வருமாறு:—

எஸ். என். மிஸ்ரா (பழைய காங்கிரஸ்), பூபேஷ் குப்தா (கம்யூனிஸ்டு), சமர் முகர்ஜி (மார்க்சிஸ்ட்), திரிதீப் சவுத்ரி (புரட்சிகர சோஷலிஸ்டு), சமர் குஹா, மது தன்வாதே (சோஷலிஸ்டு), எல்.கே. அத்வானி, டி. வி. தேங்கி (ஜன சங்கம்). ராபி ராய் (சம்யுக்த சோஷலிஸ்டு) ஆகியோர்.

இந்த 9 எதிர்க்கட்சி தலைவர்களும் இன்று டெல்லியில் பிரதமர் இந்திரா காந்தியைச் சந்தித்து முக்கிய ஆலோசனை நடத்துவார்கள்.

சி.ஐ.டி.யூ.,ஏ.ஐ.டி.யூ.சி., எச்-எம்.எஸ். ஆகியவை உள்பட பல்வேறு தொழிற்சங்கங்கள் இந்தஅறிக்கைக்குஆதரவு தெரிவித்துள்ளன.

ரெயில்வே ஸ்டிரைக் காலவரையின்றி நடைபெறும் நிலைமை ஏற்பட்டுள்ளது என்றும் இந்த நிலைமைக்கு மத்திய அரசின் கொள்கையே காரணம் என்றும் போராட்டக் குழுவின் அறிக்கை தெரிவித்தது.

## மறியல் கிளர்ச்சி

பம்பாய், மே 17—மகாராஷ்டிரத்தில் ரெயில்களை ஓட்ட பிரதேச ராணுவத்தினர் முற்படுவதைக் கண்டித்து தண்டவாளத்தில் படுத்து மறியல் போராட்டம் நடத்தப்படும்.

பம்பாயில்உள்ள ரெயில்வே ஊழியர்களின் போராட்டக் குழு இதுசம்பந்தமாக ஒரு தீர்மானத்தை மேற்கொண்டுள்ளது.

இந்த மறியல்போராட்டத்தில் கலந்துகொள்வதற்காக பல்வேறு தொழிற்சங்கங்களை சேர்ந்த ஊழியர்களைத் திரட்டும் வேலை உடனே ஆரம்பமாகும்.

## ஜனதிபதியிடம் தொழிற் சங்க தலைவர்கள் கோரிக்கை

புதுடெல்லி, மே 17— பல்வேறு தொழிற்சங்கத் தலைவர்கள் நேற்று டெல்லியில் ஜனதிபதி கிரியை தனித்தனியாக சந்தித்து, ரெயில்வே தொழிலாளர் போராட்டத்தில் சமரசம் செய்து வைக்கும்படி கேட்டுக்கொண்டனர்.

ஏ. பி. சர்மா, எஸ். ஏ. டாங்கே,என்.கே.கிருஷ்ணன் மதுலிமாயி, எஸ். ஆர். குல்கர்ணி, மணிபென் காரா முதலானோர்இதுசம்பந்தமாக ஜனதிபதியைச் சந்தித்தனர்.

## பெர்னண்டஸ் உண்ணாவிரதம்: 9 ராத்தல் இழந்தார்

புதுடெல்லி, மே 17—சென்ற திங்கட்கிழமையிலிருந்து சிறையில் உண்ணாவிரதப் போராட்டம் நடத்திவருகிற பெர்னண்டஸ் உள்பட 4 தொழிற்சங்கத் தலைவர்களில் ஒவ்வொருவருடைய எடையும் சுமார் 9 ராத்தல் குறைந்துள்ளது. இந்த தகவலை போராட்டக் கமிட்டி அறிவித்தது.

அரசாங்கத்தின் காட்டுமிராண்டித்தனமான அடக்குமுறையை எதிர்த்துப் போராடுவதைத் தவிர தொழிலாளர்களுக்கு வேறு வழியில்லை என்று பெர்னண்டஸ் கூறியதாகவும் போராட்டக் கமிட்டி தெரிவித்தது.

## 10,000 பேர் வேலைக்கு திரும்பினர்

கடந்த 24 மணி நேரத்தில் நாட்டில் சுமார் 10 ஆயிரம் ரெயில்வே தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பிவந்துவிட்டதாக ரெயில்வே இலாகா அதிகாரி ஒருவர் நேற்று டெல்லியில் கூறினர்.

நாட்டின் மிகப்பெரிய முகல்சராய் சரக்கு ரெயில் நிலையம் அநேகமாக சகஜநிலை எட்டிவிட்டது; அதன் வழியாக 93 சரக்கு ரெயில்கள் ஓடியதாகவும் அவர் கூறினர்.

நேற்று காலை 8 மணியோடு முடிவடைந்த 36 மணி நேர காலத்தில் 1,800-க்கு மேற்பட்ட வாகன்களில் அசன்சால் பிரிவிலிருந்து நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கு நிலக்கரி அனுப்பப்பட்டதாகவும் அறிவிக்கப்பட்டது.

ரெயில் ஊழியர்கள், அவர்களுடைய வேலைநிறுத்தத்தை முடித்துக்கொண்டு வேலைக்குத் திரும்பவேண்டும் என்று அகில இந்திய ஸ்டேஷன் மாஸ்டர்கள் சங்கத்தின் தலைவரான நரசிங் நாராயண் பாண்டே நேற்று டெல்லியில் தெரிவித்தார்.

தமிழக அமைச்சர்களிடம் ஜனதிபதி கிரி சொன்னது:

# 'கருணாநிதியிடம் எனது கருத்துக்களை கூறுங்கள்'

**புதுடெல்லி, மே 17— "எனது கருத்துக்களை முதல் அமைச்சர் கருணாநிதியிடம் கூறுங்கள்" என்று ஜனதிபதி கிரி, தமிழக அமைச்சர்கள் நெடுஞ்செழியன், மாதவன் ஆகிய இருவரிடமும் கூறினர்.**

டெல்லியில்ஜனதிபதிகிரியை அமைச்சர் நெடுஞ்செழியன் நேற்று சந்தித்து ரெயில்வே தொழிலாளர் வேலை நிறுத்தம் பற்றி பேசினர்.

அமைச்சர்கள் நெடுஞ்செழியனும், மாதவனும் நேற்று டெல்லி போனர்கள்.

பிற்பகல், ஜனதிபதி கிரியை சந்தித்து பேசினர்கள். அப்போது ரெயில்வே தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் பற்றி முதல்—அமைச்சர் கருணாநிதியின் செய்தியை ஜனதிபதியிடம் தெரிவித்தனர்

## கருணாநிதியிடம் கூறுங்கள்

கருணாநிதியிடம் தனது கருத்துக்களை தெரிவிக்கும்படி நெடுஞ்செழியனிடமும், மாதவனிடமும் ஜனதிபதி கூறினர்.

தொழில் அமைச்சர் மாதவன் டெல்லியில் நிதி மந்திரி சவான், உள்நாட்டு இலாகா ராஜாங்க மந்திரி மிர்தா, தொழிலாளர் நல மந்திரி ரகுநாதரெட்டி ஆகியோரையும் சந்தித்தார்.

ரெயில்வே தொழிலாளர் வேலைநிறுத்தம் பற்றி தமிழக அரசின் கருத்துக்களை,டெல்லி மந்திரிகளுக்கு எடுத்துக் கூறினர்.

## சுப்பிரமணியும்

தொழில் வளர்ச்சித்துறை மந்திரி சி. சுப்பிரமணியத்தையும் அமைச்சர் மாதவன் சந்தித்துப் பேசினர்.

நலிவுற்ற பஞ்சாலைகளை அரசுடைமை (தேசியமயம்) ஆக்க மாநில அரசு அனுமதிக்கப்பட வேண்டும் என்று தமிழ்நாடு சட்டசபை நிறைவேற்றிய தீர்மானத்தை எடுத்துக்கூறி, அதன் அவசியத்தை வலியுறுத்தினர்.

# பஸ் மூலம் அனுப்பப்படும் அவசர தந்திகள்

சென்னை, மே 17—சென்னையிலிருந்து திருப்பதிக்கு அனுப்பப்படும் அவசரத் தந்திகள் உட்பட எல்லா தந்திச் செய்திகளும் திருப்பதிக்கு பஸ் மூலம் அனுப்பப்படுகின்றன.

கடந்த ஒருவார காலமாக சென்னை-திருப்பதி இடையே டெலிபிரிண்டர் இணைப்புகள் கோளாறு காரணமாக செயலற்று இருக்கின்றன என்பதே இதற்குக் காரணம்.

தபால் தந்தி இலாகா அதிகாரிகள் இத் தந்திகளை ஆட்களிடம் கொடுத்து பஸ்மூலம் அவர்களை திருப்பதிக்கு அனுப்புகின்றனர்.

திருப்பதியிலிருந்தும் தந்திகள் இப்படி பஸ் மூலம் சென்னைக்கு அனுப்பப்படுகின்றன.

திருப்பதியில் ஓர் அதிகாரி இதுபற்றிக் கூறுகையில் "இந்த தந்திகளை தபால் மூலம் அனுப்பினல் ஆகும் நேரத்தைவிட குறைவான நேரத்தில் ஆட்கள்மூலம் அவை வந்து சேருகின்றன" என்று சொன்னர்.

திருப்பதியிலிருந்துசென்னைக்கும், சென்னை வழியே மற்ற ஊர்களுக்கும் தினமும் 150 முதல் 200 தந்திகள் இப்படி ஆட்கள்மூலம் அனுப்பப்படுகின்றன என்றார் அவர்.

தந்திகளை இவ்விதம் அனுப்பினலும், தந்தி அடிக்க வருகிறவர்களிடம் தந்திக்கு உரிய கட்டணமே வசூலிக்கப்படுகிறது.

"போய்ச்சேர அதிக தாமதம் ஆகலாம்" என்று கூறியே தந்திகளை ஏற்றுக் கொள்வதால் தந்தி அடிப்பவர்களுக்கு கட்டணம் வாபஸ் கொடுக்கப்படுவதில்லை என்று அதிகாரிகள் தரப்பில் விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது.

சேலம் தொழிலாளர்கள் குமுறல்:

# "போலீசுக்கு காட்டிக் கொடுத்த காங்கிரஸ் தொழிற்சங்கம்"

**சேலம்,மே 17—ரெயில்வே ஸ்டிரைக்குக்கு ஆதரவாக கடந்த 15ந் தேதி நடந்த வேலை நிறுத்தத்தில் காங்கிரஸ் (ஐ. என். டி. யூ. சி.) தொழிற்சங்கத்தினர் கலந்துகொள்ளாததுடன், யார் யாரை கைது செய்யலாம் என்ற தகவலையும் போலீசுக்குக் கொடுத்ததாக, வேலைநிறுத்தத்தில் ஈடுபட்ட தொழிலாளர்கள் தங்கள் மனக்குமுறலை தெரிவித்தனர்.**

ரெயில்வே தொழிலாளர்களுக்கு ஆதரவு தெரிவித்து மே 15-ந் தேதி சேலம் நகரிலும் சேலம் நகரைச் சுற்றிலும் சுமார் 20 ஆயிரம் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்தனர். சேலம் தர்மபுரி வட ஆற்காடு மாவட்டங்களில் ஓடும் அண்ணா போக்குவரத்துக் கழக பஸ்கள் எதுவும் ஓடவில்லை. இதனால் போக்குவரத்து பெரும்பாலும் பாதிக்கப்பட்டது. அரசாங்க பஸ் போக்குவரத்து பஸ்களும் ஓடவில்லை.

சேலம் நகரில் உள்ள பாங்கி ஊழியர்களும் வேலைநிறுத்தம் செய்தனர்.

சேலம் நகரை அடுத்துள்ள மேக்னிசைட் தொழிற்சாலைகளிலீ (3 கம்பெனிகள் பர்ன் அண்டு கம்பெனி, டால்மியா மேக்னிசைட், சேலம் மேக்னிசைட் கம்பெனி) சுமார் 10 ஆயிரம் தொழிலாளர் வேலை நிறுத்தத்தில் பங்கு கொண்டனர். இதே போல சேலம் நகரை அடுத்துள்ள கண்ணாடித் தொழிற்சாலை தொழிலாளர்களும் வேலைக்கு செல்லவில்லை.

சேலம் நகரில் உள்ள ராஜேந்திரா மில், ஜவஹர் மில், கூட்டுறவு நூற்பாலை முதலியவைகளிலும் பீடித் தொழிற்சாலைகளிலும் வேலை நிறுத்தம் நடந்தது.

மில்களிலும் - மேக்னிசைட்டிலும் சில ஐ.என்.டி.யூ.சி. தொழிலாளர்கள் வேலைக்குச் சென்றனர். அன்றைய வேலை நிறுத்தத்தில் ஏ.ஐ.டி.யூ. சி; சி.ஐ.டி.யூ; தி.மு.க. சங்கங்கள் பங்குகொண்டன.

சேலம் வரும் ரயில்களும் வரவில்லை. விருத்தாசலம் செல்லும் ரயிலும் புறப்படவில்லை. சேலம் ஜங்ஷன் வழியாக செல்லும் சரக்கு ரெயில்களும் ஓடவில்லை.

## போலீசுக்கு தகவல்

இந்த ரெயில்வே ஸ்டிரைக்கில் ஐ.என்.டி. யு. சி. யினர் கலந்து கொள்ளாதது மட்டுமின்றி யார் யாரைக் கைது செய்ய வேண்டும் என்ற தகவல்களையும் போலீசாருக்கு கொடுத்து வருகின்றனர் என வேலை நிறுத்தம் செய்த தொழிலாளர்கள் வேதனையோடு தெரிவித்தனர்.

பாங்கி ஊழியர்கள் சேலம் நகர முக்கிய தெருக்கள் வழியாக ரெயில்வே தொழிலாளர் போராட்டத்துக்கு ஆதரவு தெரிவித்து ஊர்வலம் வந்தனர்.

மாலை பாங்க் சிப்பந்திகள், எஸ்.ஐ.சி.சிப்பந்திகள் தபால் தந்தி டெலிபோன் ஊழியர்கள் ஆகியோர் ரெயில்வே தொழிலாளர் போராட்டத்துக்கு ஆதரவு தெரிவித்து ஊர்வலம் நடத்தி தபால் தந்தி அலுவலகம் முன் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

## போலீஸ் தடை உத்தரவு

செங்கல்பட்டு, மே 17—போலீசாரின் முன் அனுமதியின்றி பொதுக் கூட்டமோ, ஊர்வலமோ நடத்தக்கூடாது என்று செங்கற்பட்டு மாவட்டம் பூராவிலும் தடை உத்தரவு போடப்பட்டுள்ளது.

## நாளைய நிகழ்ச்சிகள்

109-வது வட்ட பழைய காங்கிரஸ் கமிட்டி பொதுக் கூட்டம் பாதங்கராஜ் தலைமையில் திண்டிவனம் கே. ராமமூர்த்தி, என். எம். மணிவர்மா, கிள்ளிவளவன், ரமணிபாய், வி. சுந்தரம் மற்றும் பலர் பேச்சு போக்ரோடு திடல், மாம்பலம். இரவு 7 மணி.

இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம். மூன்றும் ஆண்டு விழா, எம். கே. வேங்கடராமன், அகவழிபாடு துவக்கிவைக்கிறார். பஜனை, உபன்யாசம் சத்சம்பாஷணை, இடம் பெறும். 32, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை-1, காலை 4 மணி.

# சனிக்கிழமை ஊட்டி ரேசுக்கு டிப்ஸ்

**ஊட்டி, மே 17—ஊட்டியில் நாளை சனிக்கிழமை நடைபெறஇருக்கும் ரேசுக்கு டிப்ஸ் விவரம் வருமாறு:**

**1. தாம்பரம் பிளேட் டிவி 1**
1200மீட்டர்பிற்பகல் 2-00மணி

1. அசுல் 60-00 — சுனிலால்—3
2. ராயல் ஹாவன் 55-50 — இக்பால்—1
3. மாண்டேட் 53-00 — கிருபால்சிங்—2

டிப்ஸ்:
1 அசுல்

**2. தாம்பரம் பிளேட் டிவி-2-ஏ**
1200 மீட்டர் 2-35 மணி

1 ஹிஸ் எக்சலன்சி 60-00 — அப்சல்கான்—3
2 பிளையிங் பிரின்சஸ் 59-00 — என். அகமது—4
3 மார்த்தா கன் 55-50 — பி. உட்ஸ்—1
4 பிரின்ஸ் விஜயா 50-50 — ஆர். அகமது—2

டிப்ஸ்:
1. பிளையிங் பிரின்சஸ்
2. ஹிஸ் எக்சலன்சி

**3. சென்னை கப்**
1600 மீட்டர் 3-10 மணி

1. ஜோங்குவில் 60-00 — இக்பால்—2
2. ராக் டயமண்ட் 59-00 — சுனிலால்—1
3. கைராக்ஸ் 52-50 — க[illegible]சிங்—3
4. வேலா 52-50 — கிருபால்சிங்—6
5. நெல்சன் 52-00 — மனுசே—7
6 ராக்பஸ்டர் 50—00 — அரவிந்தா—4
7 சில்வர் ஸ்பிரிங் 49—00 — கிரெஜுதீன்—5

டிப்ஸ்:
1. கைராக்ஸ்
2. ஜோங்குவில்

**4. தாம்பரம் பிளேட் டிவி 2-பி**
1200 மீட்டர் 3-45 மணி

1 திஸ்மக்ளர் 60-00 — பெரிஸ்—1
2 ஓல்ட்பார் 57-00 — அப்சல்கான்—2
3 பிளசண்ட் பேபி 52-50 — மனுசே—4
4 டிப்ளமாட் 50-00 — பிகாடோ—3

டிப்ஸ்:
1 பிளசண்ட் பேபி
2 திஸ்மக்ளர்

**5. தாராபுரம் பிளேட்**
1400 மீட்டர் 4-20 மணி

1 சன் ஸ்டார் 60-00 — சிராஜுதீன்—3
2 சமத்கார் 57-50 — சுனிலால்—7
3 ஆர்டண்ட் ஸ்டார் 55-00 — பெரிஸ்—5
4 தண்டர்ஹெட் 54-00 — சுகுமார்—4
5 ராம்திலக் 53-50 — பிகாடோ—2
6 மிஸ்டர்ஒண்டர்புல் 47-50 — கதம்—6
7 என்ராப்சர் 47-50 — கிருபால் சிங்—1

டிப்ஸ்:
1 மிஸ்டர் ஒண்டர்புல்
2 தண்டர் ஹெட்

எதிர்பாராத வெற்றி: ராம்திலக்

ஜாக்பாட்: 1, 2, 3, 4, 5-வது பந்தயங்கள்

டிரெபிள்: 3, 4, 5-வது பந்தயங்கள்

நிச்சய வெற்றி: கைராக்ஸ்

## இன்றைய சினிமா

சென்னை
ராம் — மகாதேவி
நியூ எல்பின்ஸடன் — சட்டைக்காரி
நேஷனல் — பாசமலர்
ஈராஸ் — கௌபாய் குள்ளன்
தாம்பரம்
நேஷனல் — திருடி
எம். ஆர். தியேட்டர் — பூல் அவுர் பத்தர்
ஸ்ரீசித்ரா — பிளாக் மெயில்
வில்லிவாக்கம்
ராயல் — திருடி
குரோம்பேட்டை
வெற்றி — வெள்ளிக்கிழமை விரதம்

# ஆயுட்கால ஜனதிபதி

பெல்கிரேட், மே 17—யுகோஸ்லாவியா நாட்டின் ஜனதிபதியாக இருந்துவரும் டிட்டோ இப்போது ஆயுட்கால ஜனதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

புதிதாக மாற்றியமைக்கப்பட்டுள்ள யுகோஸ்லாவிய பார்லிமெண்ட் இவ்வாறு முடிவு செய்துள்ளது.

கருணாநிதி பேச்சு:

# "அதிகாரிகளை காரணம் காட்டி, மந்திரிகள் தப்பித்துக்கொள்வதா?"

சென்னை, மே 17—"என்னையோ, அல்லது அதிகாரிகளையோ காரணம் காட்டி, மக்களுக்குச் செய்யவேண்டிய காரியங்கள் செய்யப்படவில்லை என்று கூறி தப்பித்துக்கொள்வது முறையல்ல" என்று முதல் அமைச்சர் கருணாநிதி, மற்ற அமைச்சர்களுக்கு யோசனை கூறினர்.

"தனியொருவருக்கு வருகின்ற வேதனையை சமுதாயத்தின் மீது கொண்டுபோய் திணிக்கக்கூடாது" என்று கூறிய முதல்வர் கருணாநிதி, "சமுதாயத்திற்கு வருகின்ற வேதனையை தனி ஒருவர் தாங்கிக் கொள்ளும் மனோபக்குவத்தைப் பெறவேண்டும்" என்றும் கேட்டுக்கொண்டார்.

சென்னையில் ஒரே மேடையில் 51 ஜோடிகளுக்கு திருமணம் நடந்தது. இந்த திருமணங்களை [illegible]ல்-அமைச்சர் கருணாநிதி [illegible]வைத்தார்.

## 51 ஜோடி

முதல்-அமைச்சர் கருணாநிதியின் 51-வது பிறந்த தின விழாவையொட்டி சேத்துப்பட்டு அம்பேத்கார் திடலில் நேற்று 51 ஜோடிகளுக்குஇலவச திருமணம் நடந்தது. விழாவுக்கு குடிசை மாற்று வாரிய தலைவர் அரங்கண்ணல் தலைமை தாங்கினர்.

51 ஜோடி திருமணத்தை முதலமைச்சர் கருணாநிதி நடத்தி வைத்தார். இதில் 23 ஜோடி திருமணம் கலப்புத் திருமணம் ஆகும்.

## பிராமணப் பெண்

இந்த ஜோடிகளில் மணமகனோ மணமகளோ அரிஜன வகுப்பைச் சேர்ந்தவராக இருந்தால் அடுத்தவர் மேல் ஜாதியை சேர்ந்தவராக இருந்தார்.

அரிஜன வகுப்பை சேர்ந்த பாலகிருஷ்ணன், பிராமண வகுப்பைசேர்ந்த ருக்மணியை மணந்தார். இதேபோல் ரங்கநாதன் என்ற அரிஜன மணமகன் லட்சுமி என்ற அய்யங்கார் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டார். இதேபோல் சுந்தரேசன் என்ற அரிஜன மணமகன் சீதா என்ற பிராமணப்பெண்ணையும், பாலகிருஷ்ணன் என்ற பிராமண வாலிபர் சீதா என்ற அரிஜனப்பெண்ணையும் மணந்தார்கள்.

## மங்கல நாண்

முதலில் 6 ஜோடிகளுக்கு ஒவ்வொரு ஜோடிகளாக முதல் அமைச்சர் கருணாநிதி அழைத்து திருமணம் செய்துவைத்தார். 45 ஜோடிகள் மேடைக்கு கீழே உள்ள பந்தலில் இருந்தனர்.

எல்லா மணமகன் கையிலும் முதல்-அமைச்சர் மங்கல நாணை கொடுத்து விட்டு மேடையில் ஏறி மங்கலநாணை மணமகள் கழுத்தில் கட்டும்படி கூறினர். ஒரே சமயத்தில் 45 மணமகன்களும் தாலி கட்டினர்கள்.

## அமைச்சர்கள்

ஒவ்வொரு ஜோடிக்கும் வேட்டி-சேலை செப்புகுடம், செம்பு ஆகியவற்றை முதல்-அமைச்சர் வழங்கினர்.

இந்த திருமணத்துக்கான செலவை அரிஜன நலஇலாகா கொடுத்தது.

விழாவில் அமைச்சர்கள் அன்பழகன், சி. வி. எம். அண்ணாமலை, ராசாங்கம், பாராளுமன்ற உறுப்பினர் முரசொலி மாறன், வீராசாமி எம்.எல்.ஏ., கோபால் எம். எல். ஏ., சென்னை மாவட்ட திமுக செயலாளர் சீதாபதி, ஜார்ஜ் கோமகன் எம்.எல்.சி., ஏ.எஸ். ராமன், திருக்குறள் முருகேசன், முத்துவேல் எம்.எல்.ஏ. ஆகியோர் பேசினர்கள். மாணிக்கவாசகம் வரவேற்ரூர்.

திருமணத்தை நடத்தி வைத்து முதலமைச்சர் கருணாநிதி பேசும்போது கூறியதாவது;—

கவிஞர் மாணிக்கவாசகத்தின் முயற்சி அடிப்படையில் 51 இணைகள்இன்று இல்வாழ்வு ஒப்பந்தத்தை நம் அனைவருடைய நல்வாழ்த்துக்களோடு அமைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் அனைவருக்கும் எனது இதய வாழ்த்துக்கள்.

கடந்த ஆண்டு இப்படி நடைபெற்ற விழாவில், மணமக்களுக்கு அரிசன நலத்துறையின் சார்பில் வேட்டி சேலை என்ற அளவோடு பரிசுகள் வழங்கப்பட்டன. தாலி செய்து கொடுக்கப்பட்டது.

இந்த ஆண்டு பாத்திரங்களும் அவர்களுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன என்று முன்னால் பேசியவர்கள் குறிப்பிட்டார்கள்.

முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் பாலகிருஷ்ணன் பேசும்போது அமைச்சர் இராசாங்கம் அவர்களிடம் மணமக்களுக்குப் பாத்திரங்கள் வழங்க வேண்டுமென்று கேட்கப்பட்டதாகவும், அதற்கு அமைச்சர் "முதல்வரிடம் ஒப்புதல் பெற்று இவைகளை வழங்குவதாக ஆணையிடுவதாக" சொன்னதாகவும் இங்கே குறிப்பிட்டார்.

அமைச்சர் ராசாங்கம் பேசுகிற நேரத்தில் முதலமைச்சரின் ஒப்புதல் பெற்றுத்தான் இந்தப் பாத்திரங்களை வழங்க அரிஜன நலத்துறைக்கு ஆணை பிறப்பித்தேன் என்று குறிப்பிட்டார்.

## தப்பித்துக் கொள்வது அழகல்ல

நான் ராசாங்கம் அவர்களுக்குச் சொல்[illegible]கொள்வேன். இதுபோல் [illegible]த்தப்பட்ட பின்தங்கிய ஏழை எளிய மக்களுக்குச் செய்யபடவேண்டிய காரியங்கள் ஒரு வேளை முதலமைச்சர் தொலை பேசியில் கிடைக்கவில்லை, அல்லது ஊரில் இல்லை. அல்லது உடனடியாகத் தொடர்பு கொள்ள முடியவில்லை என்பதற்காகத் தாமதப்படவேண்டாம் என்றும், இதுபோன்ற காரியங்களை நீங்களே செய்யலாம் என்றும் அவருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னையோ, அல்லது அதிகாரிகளையோகாரணங்காட்டி மக்களுக்குச் செய்யப்படவேண்டிய காரியங்கள் செய்யப்படவில்லை என்று கூறி தப்பித்துக்கொள்வது முறையுமல்ல; நாம் ஏற்றுக்கொண்ட பொறுப்புக்கு அழகுமல்ல.

அண்ணா அவர்கள் தாழ்த்தப்பட்ட—பின்தங்கிய நடுத்தர மக்களுக்காகப் பாடுபடுவதுதான் இந்தக் கழக அரசின் தலையாய நோக்கம் என்று கூறினர்.

அந்த அறிவுரையின்படி நாங்கள் நடக்கிறோம். அவர் மறைந்தாலும், அவர் சொன்ன கொள்கைகள் எங்கள் நெஞ்சில் நிறைந்திருக்கின்றன என்பதற்கு அடையாளம் தான் இன்று நடைபெறுகின்ற காட்சி.

இந்த இடத்தின் பெயர் சேத்துப்பட்டு—மங்களபுரம்.

மங்களகரமான காரியங்கள் ஆண்டுதோறும் நடைபெறுகின்ற காரணத்தால்மங்களபுரம் என்று வந்ததோ நானறியேன்.

சேத்துப்பட்டு இன்னும் கொஞ்ச நாளில் பெயரை மாற்றிக்கொண்டாலும் கொள்ளுமென்று நான் கருதுகிறேன்.

ஏனென்றல் இங்கு ஆண்டு தோறும் கவிஞர் மாணிக்கவாசகம் அவர்கள் ஒரு ஆணையும் பெண்ணையும் சேர்த்து கட்டி வைத்துக் கொண்டிருக்கிற காரணத்தால் சேத்துப்பட்டுத் தன் பெயரை சேர்த்துக்கட்டு என்கிற அளவுக்கு மாற்றிக்கொண்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

## திமுக.வின் முதலீடு

அரிசன நலத்துறையின் சார்பாக இந்த மணமக்களுக்காக செலவிடப்படுகின்ற தொகை சென்ற ஆண்டு ஆயிரத்து ஐநூறு ரூபாய் செலவழிக்கப்பட்டிருக்குமானல் இந்த ஆண்டு பாத்திரங்களும் வாங்கப்பட்டதற்காக ஆறுயிரம் ரூபாய் செலவாகியிருக்கிறது.

அந்த ஆறுயிரம் ரூபாய் பெரிதல்ல. அது முக்கியமல்ல.

இன்று கூட என் பிறந்த நாளையொட்டி தமிழ்நாட்டிலுள்ள அங்கஹீனர்கள் - குருடானவர்கள் - செவிடானவர்கள் - கைகால் அற்றவர்களில்- முதற் கட்டமாக 25 ஆயிரம் பேர் இந்த ஆண்டு பயனடைகின்றவகையில் ஒரு கோ[illegible] ரூபாய்த் திட்டத்தை அறி[illegible]வித்துவிட்டு வந்திருக்கிறேன்.

ஆகவே ஆறுயிரம் ரூபாய் என்[illegible]து சாதாரணமானதுதா[illegible].

ஆனல் அந்த ஆறுயிர[illegible] ரூபாயிலுள்ளது பொருளாதார மகிமை அல்ல; தரவேண்டும் என்ற உணர்வு இருக்கிறதே அந்த உணர்வு தான்—அந்த நினைப்புதான் தி. மு. கழக ஆட்சியினுடைய மு[illegible]டு.

அந்த உணர்வின் அடிப்

7-ம் பத்தி பார்க்க

## சென்ட்ரல் ரெயில் நிலையத்தில் கூட்டம்

சென்னை, மே 17—சென்னை சென்ட்ரல் ரெயில் நிலையத்தில் வழக்கம் போல் கூட்டம் இருந்தது. டிக்கட் கவுண்டர்களில் டிக்கெட்டுகள் கொடுக்கப்பட்டன. ரிசர்வேஷன் கவுண்டர்களிலும், வழக்கம்போல் 'கியூ' வரிசை காணப்பட்டது.

முற்பகலில் புறப்படவேண்டிய பிருந்தாவனம் எக்ஸ்பிரஸ், திருப்பதி எக்ஸ்பிரஸ் தாதர் எக்ஸ்பிரஸ் ஆகியவை நேற்று முன்தினம் பிற்பகல் தான் புறப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

இவையல்லாமல் மேலும் 6 எக்ஸ்பிரஸ் ரெயில்களும் ஒரு பாசஞ்சரும் நேற்று முன்தினம் சென்ட்ரல் ரெயில் நிலையத்திலிருந்து புறப்பட்டன.

கும்மிடிபூண்டிக்கு 4ரெயில்களும், திருவள்ளூருக்கு 3 ரெயில்களும் நேற்று முன்தினம் காலை புறப்பட்டுச் சென்றன.

## சிறு நீரிலிருந்து இருதய நோய்க்கு மருந்து

சிகாகோ, மே 17—இருதய நோயைக் குணப்படுத்த மனிதனின் சிறுநீரிலிருந்து ஒரு மருந்து தயாரிக்கப்பட்டுள்ளது.

இருதய கோளாறு உள்ளவர்களுக்கு திடீரென்று மாரடைப்பு ஏற்பட்ட உடனேயே இந்த மருந்தைக் கொடுத்தால்அவர்களை உயிர்பிழைக்க வைக்க முடியும் என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

பரீட்சார்த்த அடிப்படையில் தயாரிக்கப்பட்டுள்ள இம் மருந்தைப் பல இருதய நோயாளிகளிடம் அளித்துப் பார்த்ததில் இம் மருந்து சிறந்த பலனை அளித்துள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

எனவே, மனித சிறுநீரில் இருந்து இம் மருந்தைப் பேரளவில் தயாரித்துஇருதய நோயாளிகளிடம் பயன்படுத்த அமெரிக்க அரசாங்கத்திடம் அனுமதி கோரப்படும் என்று ஆராய்ச்சிவாளரான டாக்டர்மாரிஸ்மேசல்கூறினர்

இம் மருந்து "யூரோகினேசே" என்று குறிப்பிடப்படுகிறது.

நல்ல ரத்தம் ஓடும் ரத்தக்குழாய்களில் ரத்தம் கட்டியாகி பாதை அடைபடும்போதுதான் திடீர் இருதய தாக்குதல் ஏற்படுகிறது. இப்படி ஏற்பட்ட உடனேயே நோயாளிக்கு இம்மருந்தைக் கொடுத்தால் கட்டியாகும் ரத்தத்தை அது கரைத்து நோயாளி உயிர் பிழைக்கச் செய்கிறது என்று டாக்டர் மாரிஸ் மோ[illegible] கூறினர்.

இம்மருந்[illegible]ல் வேறு பாதக விளைவுகள் எதுவும் ஏற்படுவதில்லை என்றூர் அவர்.

27 பேருக்கு இம்மருந்தை அளித்ததில் ஒருவர் தான் இறந்தார். மற்றவர்கள் பிழைத்துக்கொண்டனர். வேறு 27 பேருக்கு வழக்கமான ஒரு மருந்தை அளித்ததில் 10 பேர் இறந்தனர். மற்றும் 27 நோயாளிகளுக்கு வழக்கமான வேறு மருந்தை அளித்ததில் 6 பேர் இறந்தனர். இது சிறு நீரிலிருந்து எடுக்கப்படும் மருந்தின் சிறப்பைக் காட்டுவதாக அவர் சொன்னர்.

## காவிரி ஒப்பந்தம்: திருத்த முயற்சி

பெங்களூர், 17—தமிழ்நாடு கர்நாடக அரசுகள் இடையே ஏற்பட்ட 1924 காவிரி ஒப்பந்தம் முடிந்துவிட்டதால் அதைத் திருத்த அல்லது மாற்ற முயற்சி செய்யப்படும் என்று முதல்வர் அர்ஸ் இங்கு கூறினர்.

நதி நீரில் அதிக பங்கை மாநில அரசு வற்புறுத்துவதாக மேல்சபையில் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் அவர் கூறினர்.

இந்த ஆண்டு கபினியில் தண்ணீர் தேக்கப்படும். காவிரி, கபினி ஆகிய ஆறுகளின் தண்ணீரை இணைத்துப் பயன்படுத்த அரசு விரும்புகிறது என்று அவர் கூறினர். ஆனல் அதுபற்றிய விவரங்களை அவர் தெரிவிக்கவில்லை.

பாகிஸ்தான்-இந்தியா

தகவல் தொடர்பு:

## ஜூன் மாதம் பேச்சுவார்த்தை

புதுடெல்லி, மே 17—மீண்டும் தகவல் தொடர்பையும் பிரயாண வசதியையும் ஏற்படுத்துவதுபற்றியபேச்சை ஜூன் இரண்டாவது வாரத்தில் நடத்த பாகிஸ்தானுக்கு இந்தியா யோசனை கூறியுள்ளது.

இந்த மாத முடிவில் இஸ்லாமாபாத்தில் பேச்சு நடத்தலாம் என்று கூறி பாகிஸ்தான் எழுதிய கடிதத்துக்கு இந்தியா இவ்வாறு பதிலளித்துள்ளது.

## இந்திரா-முஜிப் பேச்சு

புதுடெல்லி, மே 17—இந்தியப் பிரதமர் இந்திரா காந்தியும், வங்காள தேஷ் பிரதமர் முஜிபுர் ரகிமானும் இரண்டாவது நாளாக தொடர்ந்து பேச்சு நடத்தினர். இப்பேச்சுகள் சுமார் ஒரு மணி நேரம் நடந்தது.

இப்பேச்சுகளில் இரு நாடுகளின் மந்திரிகளும் பங்கு கொண்டனர்.

இரு தலை[illegible]களின் பேச்சு முடிந்த பிற[illegible] இருநாடுகளின் மந்திரிகளும் அதிகாரிகளும் தனியே சந்தித்து வர்த்தக, பொருளாதார ஒத்துழைப்பு பற்றி விவாதித்தனர்.

"அர்த்தால் வெற்றிபெற்றதற்கு தமிழக அரசு காரணம் என்பதா?"

# காங்கிரஸ் தலைவர்மீது கல்யாணசுந்தரம் காட்டமான தாக்கு

சென்னை, மே 17—நேற்று முன்தினம் நடைபெற்ற பொதுவேலை நிறுத்தம் வெற்றி பெற்றதற்கு தமிழக அரசின் ஒத்துழைப்புத்தான் காரணம் என்று புது காங்கிரஸ் தலைவர் ராமையா குறிப்பிட்டிருந்தார் அல்லவா? இதற்கு வலது கம்யூனிஸ்டு தலைவர் கல்யாணசுந்தரம் எம். பி. கண்டனம் தெரிவித்தார்.

ரெயில்வே தொழிலாளர் வேலைநிறுத்தம் குறித்து ஜனதிபதி கிரி தெரிவித்ததாகக் கூறப்படும் யோசனைகள் ஆக்கப்பூர்வமானதாகும் என்றும் அவர் கருத்தறிவித்தார்.

ரெயில்வே வேலை நிறுத்த நிலைமை குறித்து கல்யாணசுந்தரம் நேற்று நிருபர்களுக்குப் பேட்டியளித்தார்.

நேற்று முன்தினம் நடந்த அர்த்தாலின் வெற்றி தொழிலாளர் வர்க்கத்தின் ஒற்றுமையை தெளிவாக எடுத்துக்காட்டி விட்டது என்றும் அவர் கூறினர்.

தி. மு. க. உட்பட எல்லா தொழிற்சங்கங்களும் ஒன்று சேர்ந்ததாலேயே பஸ் போக்குவரத்தை நடத்தமுடியாது போய்விட்டதுஎன்றும், இதற்கு அரசாங்கம் காரணமல்ல என்றும் அவர் கூறினர்.

## ராமையாவுக்கு அரசியல் தெரியாது

இது குறித்து புது காங்கிரஸ் தலைவர் ராமையா தமிழக அரசைக் குற்றஞ் சாட்டியிருப்பது அர்த்தமற்றது என்றும் அவர் கூறினர், ராமையாவுக்கு அரசியலே தெரியாது என்றூர் அவர். மேற்கு வங்கத்தில் அர்த்தாலில், புது காங்கிரசும் பங்கு கொண்டிருந்ததை கல்யாணசுந்தரம் சுட்டிக் காட்டினர்.

தெற்கு ரெயில்வேயில் 14-வது நாளாக ஸ்டிரைக் நடைபெற்று வருவதாகவும், 1946க்குப் பிறகு இவ்வளவு நீண்ட நாட்கள் வேலை நிறுத்தம் நீடிப்பது இதுவே முதல் தடவை என்றும் அவர் கூறினர்.

## கிரி யோசனை ஆக்கபூர்வமானது

வேலை நிறுத்தம் சம்பந்தமாக ஜனதிபதி கிரி தெரிவித்ததாகக் கூறப்படும் யோசனைகள், தனிப்பட்ட முறையில் இருந்தாலும், ஆக்கபூர்வமானது. வரவேற்கத் தக்கது என்றும் அவர் தெரிவித்தார்.

கேரள மாநிலத்தில்

# படி அரிசி 7 ரூபாய்: ரெயில்வே ஊழியர் ஸ்டிரைக் எதிரொலி

கொச்சி, மே 17 ரெயில்வே ஸ்டிரைக்கின் எதிரொலியாக கேரளாவில் படி அரிசி 7 ரூபாயாக உயர்ந்துள்ளது.

கொச்சி மார்க்கெட்டில் அரிசி விலைமட்டுமன்றி இதர அத்தியாவசிய பொருட்களின் விலைகளும் 15 முதல் 20 சதவிகிதம் உயர்ந்துள்ளன.

முன்னர் படி அரிசி 5 ரூபாயாக இருந்தது. இப்போதோ ரூ 7க்கும் அதிகமாக உயர்ந்துள்ளது. பருப்பு வகைகள் பட்டாணி ஆகியவற்றின் விலைகளும் உயர்ந்துள்ளன.

பருப்பு உற்பத்தியாகும் ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம். ஆந்திரா முதலிய மாநிலங்களிலிருந்து கூட்ஸ் வாகின்கள் மூலம் அனுப்பப்பட்ட பருப்பு வகைகள் கேரளாவந்து சேரவில்லை ஸ்டிரைக் காரணமாக அவை வழியில் எங்கோ இருக்கின்றன.

மாநிலத்தில் அரிசி விளையும் இடங்களிலிருந்து இதர இடங்களுக்கு அரிசி ஒழுங்காக வந்து சேரவில்லை என்பதே அரிசி விலை உயர்வுக்கான காரணம் என்று கூறப்படுகிறது.

அண்டை மாநிலங்களிலிருந்து தனிப்பட்டவர்கள் அரிசி வாங்கி வியாபாரம் செய்ய அனுமதி இல்லை.

அரிசி மற்றும் இதர அத்தியாவசிய பொருட்களின் விலைகள் உயர்ந்துள்ளதால் ஓட்டல்காரர்கள் சாப்பாடு. சிற்றுண்டி ஆகியவற்றின் விலையை உயர்த்தியுள்ளனர்.

# வரி ஏய்ப்பைக் கண்டுபிடிக்க உதவிய எம். பி.க்கு ரூ. 9000 பரிசு

புதுடெல்லி, மே 17— ஒரு பெரிய தொழில் நிறுவனம் வரி ஏய்ப்பில் ஈடுபட்டது. இதை புது காங்கிரஸ் கட்சி எம். பி. யான சந்திரசேகர் கண்டு பிடித்து வருமான வரி இலாகாவுக்குத் தெரிவித்தார். எனவே வருமானவரி இலாகாவினர் அவருக்கு [illegible]9000 பரிசு அளித்துள்ளனர்.

சந்திரசேகர் எம். பி. புது காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர்.

ஒருவர் வரி ஏய்ப்பைக் கண்டுபிடித்து த[illegible]வல்கொடுத்தால், அத் தகவல் மூலம் வசூலிக்கப்பட்ட வரியில் 10 சதவிகிதத்தை பரிசாகக் கொடுக்கலாம்எனவருமான வரிச் சட்டத்தில் கூறப்பட்டுள்ளது.

சந்திரசேகர் கூறிய தகவலின்பேரில் ரூ. 90,000 வரி வசூலிக்கப்பட்டதால் அவருக்கு ரூ. 9,000 பரிசளிக்கப்பட்டது.

நாட்டில் ஏகபோக நிறுவனங்களை ஆராய்ந்து அவற்றின் நடவடிக்கைகளை அம்பலப்படுத்துவோருக்கு உதவுவதற்காக இந்த ரூ. 9,000 தொகையைக் கொண்டு அறக்கட்டளை அமைக்கப் போகிறேன் என்று நிருபர்களிடம் சந்திரசேகர் கூறினர்.

மேலும் நிறையப் பரிசுகள் எனக்கு இனி தொடர்ந்து கிடைக்கும். அப் பணமெல்லாம் அறக்கட்டளைக்குப் போகும் என்றும் அவர் சொன்னர்.

## நீர் மட்டம்

சென்னை மே 15—

| | |
|---|---|
| மேட்டூர் | 5·56மீட்டர் |
| பெரியாறு | 2·55 ,, |
| வைகை | 16·40 ,, |
| பாபநாசம் | 16·99 ,, |
| கிருஷ்ணகிரி | 8·99 ,, |
| சாத்தனூர் | 18·29 ,, |
| மணிமுத்தாறு | 24·86 ,, |

5-ம் பத்தி தொடர்ச்சி

படையில்தான் நாங்கள் இயங்குகிறோம்.

ஆகவே நாம் சமுதாயத்திற்காக பாடுபடுகிறோம். தனிப்பட்ட யாருக்காகவும் அல்ல. இந்த சமுதாயத்திலுள்ள குறைபாடுகளை நீக்குகிறோமே அப்படியும் சிலர் எதிர்க்கிறார்களே என்ற ஆதங்கத்தை அமைச்சர் ராசாங்கம் தெரிவித்தார். அது எந்த சமுதாயத்திலும் இருக்கக்கூடிய ஒன்றுதான். இதற்காக யாரும் [illegible] வருத்தப்படக்கூடாது.

யாருக்காகப் பாடுபடுகிறோமோ அவர்களிலே ஒரு சிலர் அதைப் புரியாத காரணத்தினல் எதிர்க்கக்கூடும் அது நாட்டில் தொடர்ந்து இருந்து வருகின்ற வரலாறு. அதற்காகவேதனைப்படகூடாது.

நன்றியை எதிர் பார்த்து—கைம்மாறு எதிர்பார்த்து நாம் எந்தக்காரியமும் செய்யவில்லை

## சத்தியவாணி கேட்டதும் கருணாநிதி சொன்னதும்

நரிக்குறவர்களுக்காக சைதாப்பேட்டை தொகுதியில் ஒரு பள்ளிக் கூடம் கட்டிக் கொடுத்தோம். அந்தப் பள்ளித் திறப்பு விழாவில் பேசிய முன்னுள் அமைச்சர் சத்தியவாணிமுத்து அம்மையார் 'கலைஞர் இவ்வளவு செய்கிறீரே நன்றி இருக்கப்போகிறதா இந்தச் சமுதாயத்திற்கு' என்று கேட்டார்.

அதற்குபாறு நான் பேசிய போது சொன்னேன். [illegible]ம்மையார் அவர்கள் வருத்தப்பட்டார்கள். நன்றியை எதிர்பார்த்து இப்படிப்பட்ட காரியங்களைச் செய்யவில்லை. எத்தனையோ ஏழை எளியவர்களுக்கு குடிசைகளை மாற்றி அருமை[illegible] மாடிக் கட்டிடங்களை [illegible]டித் தருகிறோம். இன்றைக்கு நரிக்குறவர்களுக்காக இந்த பள்ளிக்கூடத்தைக் கட்டித் தருகிறோம். நாளைக்கே இந்தச் சுவர்களில் கருணாநிதி ஒழிக என்று எழுதிவைக்கலாம். நான் அதற்காகக் கவலைப்படவில்லை. எழுதிய எழுத்து கரிக்கட்டியினல் எழுதப்பட்டது மழைநீரினல் அ[illegible]து போகும். ஆனல் கட்டிடம் நிலையாக இருக்கும். அதுதான் நமக்குத் தேவையே தவிர நன்றியைஎதிர்பார்த்து இதுபோன்ற காரியங்களைச் செய்யவில்லைஎன்று சொன்னேன்

ஆகவே, தனிப்பட்டவர்களுக்காக அல்ல; இந்தச் சமுதாயத்திலே நான் உயர்ந்தேனே - என் பிள்ளைக்குட்டிகள் உயர்ந்தார்களா - என்னுடைய சுற்றத்தார்கள் உயர்ந்தார்களா? என்று கணக்கிடுவதைவிட, இன்று தாழ்த்தப்பட்ட சமுதாயத்தில் ஏறத்தாழ ஒரு கோடி மக்கள் இருக்கிறார்கள் என்றல் அந்த ஒரு கோடி மக்களும் பொதுவாக வாழ்ந்தார்களா? உயர்ந்தார்களா என்றகேள்விக்கேவிடை காண வேண்டும்

பின்தங்கிய மக்கள் இரண்டு கோடி மக்கள் இருக்கிறார்கள் என்றல், அவர்களுடைய வாழ்வு உயர்ந்ததா என்ற கேள்விக்கு விடை காண வேண்டும் என்பதுதான் அந்த சமுதாயத்திற்காகப் பாடுபடுகிறவர்களின் நோக்கமாக இருக்க வேண்டும்.

தனியொருவருக்கு வருகிற வேதனையை சமுதாயத்தின் மீது கொண்டுபோய் திணிக்கக்கூடாது.

சமுதாயத்திற்கு வருகின்ற வேதனையை தனி ஒருவர் தாங்கிக் கொள்கின்ற மனப்பக்குவத்தைப் பெறுக வேண்டும் அதுதான் உண்மையான பொது வாழ்வுக்கு பொருள், அழகு.

இவ்வாறு முதல் அமைச்சர் கருணாநிதி பேசினர்.

# பட அதிபர் மீது தேவிகா கடும் தாக்கு

"புதிதாக தமிழ்த் திரையுலகிற்கு வந்துள்ள தயாரிப்பாளர் ஒருவர், நடிகைகளும் நடிகர்களும் தான் நினைத்ததைப்போலெல்லாம் நடக்க வேண்டும் என்று எண்ணுகிருர்" என்று 'நவமணி'க்கு அளித்த சிறப்புப் பேட்டியின்போது நடிகை தேவிகா மிகவும் வருத்தத்துடன் கூறினுர்.

மேலும் அவர் இது குறித்து தெரிவித்ததாவது:—

இரண்டு படங்கள் வெற்றியடைந்துவிட்டால் எல்லோரும் தான் சொல்வதைக் கேட்டுத்தான் ஆகவேண்டும் என்று அந்தப் படத் தயாரிப்பாளர் நினைத்துவிட்டார்.

தன்னுடைய படத்தில் நடிக்க வேண்டும் என்று கேட்பதற்காக அவர் இரண்டு மூன்று முறை எனது வீட்டிற்கு வந்தார். ஆரம்பத்தில் பேசும்போது மிகுந்த மரியாதையுடனும், பண்பாகவும் பழகினுர். அவரது பண்பைக் கண்டு நானே முன் பணமாக ரூ. 2 ஆயிரம் கொடுக்க வந்ததையும் வேண்டாமென்று ரூ. 500 மட்டும் வாங்கிக்கொண்டேன். உடல் நலமில்லாமல் இருந்தபோது ஒரு நாள் வந்து காண்ட்ராக்ட் என்று எதையோ எழுதிக்கொண்டு வந்து கையெழுத்து வாங்கினுர். நானும் அதைச் சரியாகக்கூ' ப் படித்துப் பார்க்காமல் கையெழுத்துப் போட்டுவிட்டேன்.

அப்புறம்தான் 45 நாட்களுக்குள் நான் நடிக்கவேண்டிய பகுதிகளை இரவு பகலாக நடித்துக் கொடுக்கவேண்டும் என்று எழுதப்பட்டிருப்பதாகத் தெரிந்தது.

வீட்டில் குழந்தையைக்கூட கவனிக்காமல் அப்படிச் சென்று நடிக்கப் பிடிக்கவில்லை. என்ருலும் அதைக்கூடப் பொறுத்துக் கொண்டேன்.

அதன் பின்னர் ஒவ்வொரு விஷயத்திலும் தயாரிப்பாளர் என்ற நினைவில் மிகுந்த தொந்தரவு அளிக்கத் தொடங்கினுர்.

ஜாக்கெட் தைப்பதிலிருந்து ஜடை போட்டுக் கொள்வது வரை தான் சொல்வதைக் கேட்டு அதன்படி தான் செய்ய வேண்டுமென்று பயமுறுத்த ஆரம்பித்தார்.

நானும் பல ஆண்டுகளாக எத்தனையோ படங்களில் நடித்து இருக்கிறேன். அந்த பாத்திரங்களுக்குத்தகுந்தாற்போல் எப்படி ஜாக்கெட் தைக்கவேண்டும், ஜடை போடவேண்டும் என்பதுகூடவா ஒரு நடிகைக்குத் தெரியாது?

இன்னெரு நாள் வீட்டிற்கு வந்த அவர், "பட விநியோகஸ்தர்களெல்லாம் உங்களைப் போட வேண்டாம் என்ருர்கள். நான்தான் பிடிவாதமாகப் போட்டேன்" என்று கூறினுர்.

இதுமட்டுமல்ல, தொடர்ந்து அவரது பேச்சும், போக்கும் அதிகாரமும் எனக்குப் பிடிக்கவில்லை. மரியாதை இல்லாமல் கோடிப் பணம் கொட்டிக் கொடுத்தாலும் மனதிற்கு நிம்மதி இருக்குமா?

விநியோகஸ்தர்கள் என்னைப் போடவேண்டாம் என்று சொல்லியிருந்தாலும் அதை என்னிடம் சொல்லுவது நல்ல



பண்பாடாகுமா?

முதன் முதலில் நான் 'முதலாளி' படத்தில் அறிமுகமாகின்ற போது பட அதிபர் எம். ஏ. வேணுவிடம் புதுமுகமான என்னைப் போடவேண்டாம் என்று பலர் கூறியதாக நானே கேள்விப்பட்டேன். ஆனுல், இதுபற்றி திரு வேணு அவர்கள் என்னிடம் ஒரு வார்த்தைகூடக் கூறியதே இல்லை. பத்மினி நடித்த பாத்திரத்தில் துணிச்சலோடு என்னை நடிக்க வைத்தார். வேண்டாம் என்று கூறியவர்களே பாராட்டினுர்கள். அதன்பின் பல படங்களில் நடித்தேன்.

டைரக்டர் ஸ்ரீதர் தயாரித்த "நெஞ்சில் ஓர் ஆலயம்" படத்தில் நான் நடிக்கக் கூடாது என்று சிலர் கூறியுள்ளனர்.

'கவர்ச்சியான வேடங்களில் நடித்த தேவிகா உருக்கமான பாத்திரத்தில் நன்ருக நடிப்பது சிரமம்' என்று கூறினுர்களாம்.

டைரக்டர் ஸ்ரீதர் தன் திறமையின் மீது அழுத்தமான நம்பிக்கை உள்ளவர். மற்றவர்களிடம் உள்ள நடிப்புத் திறமையை வெளிக் கொணரும் ஆற்றல்பெற்றவர். ஆகையால்தான் யார் என்ன சொன்னுலும் கேட்காமல் என்னை நடிக்க வைத்தார். 'நெஞ்சில் ஓர் ஆலயம்' ரசிகர்கள் அனைவரது நெஞ்சிலும் ஓர் ஆலயமாக இடம் பெற்றது. டைரக்டர் ஸ்ரீதர் மற்றவர்கள் கூறியதைப் பற்றி என்னிடம் எதுவும் கூறியதே இல்லை.

நட்சத்திரங்கள் சீனியரோ, ஜூனியரோ யாராக இருந்தாலும் தயாரிப்பாளர்கள் உரிய மரியாதை தரவேண்டும். புதுமுகமாக இருந்தால்கூட நடிக்க வந்து விட்டால் எல்லோரும் ஒரே குடும்பம் போல் வேற்றுமையின்றி பழக வேண்டும். உயர்வு, தாழ்வு பேதங்கள் இருக்கக் கூடாது.

இது போன்ற காரணங்களினுல் அந்தத் தயாரிப்பாளர் படத்தில் நடிக்க நான் மறுத்து விட்டேன்.

அட்வான்ஸ் பணத்தைக் கொடுத்துவிடுகிறேன், அக்ரிமெண்டைக் கொடுங்கள் என்று கேட்டேன். 'அட்வான்சைக் கொடுங்கள் எனக்கு நேரம் கிடைக்கும் போது அக்ரிமெண்டைத் தருகிறேன்' என்ருர் அவர். எனக்கு வேண்டியவர்களிடம் பணத்தைக் கொடுத்து அனுப்புகிறேன். அவரிடம் அக்ரிமெண்டை கொடுத்துவிட்டு பணத்தைவாங்கிக்கொள்ளுங்கள் என்றேன்.

ஒன்றுக்கும் சம்மதிக்காமல் எனக்கு ஒரு நோட்டீஸ் அனுப்பியிருந்தார். அதை எங்கே போட வேண்டுமோ அங்கே போட்டுவிட்டேன்.

பல பெரிய நடிகைகளிடம் சென்று அவர்களுக்கு வாய்ப்பு தந்து, 'பப்ளிசிட்டி' தருவதாக அந்த பட அதிபர் கூறியதாகவும், அவர்கள் சரியான பதிலளித்ததாகவும் கேள்விப்பட்டேன். எந்த நடிகர், நடிகையிடமும் அவர் நல்ல விதமாக நடக்கவில்லை என்று கேள்விப்படுகிறேன்.

அண்மையில் வெளிவந்த ஒரு படத்தில் மிகச் சிறந்த பிரபல நடிகையர் இருவர் நடித்தனர். அந்தப் படம் வெற்றி பெற்றது. அதன் தயாரிப்பாளர் "நான் வாய்ப்பளித்ததால்தான் இந்தக் கிழங்கள் நடிக்கின்றன. இல்லாவிட்டால் யார் வாய்ப்பளிப்பார்கள்" என்று கூறுகிருராம்.

படம் ஓடுவதற்கு முக்கிய காரணமே அவர்கள்தான் என்பது யாவருக்கும் தெரியும். இவரது படத்தில் நடிக்காவிட்டால் அவர்கள் ஒருவருக்கும் தெரியாமல் போய்விடுவார்களா? அவர்களுக்கு வேறு வழியே இல்லை என்று சொல்லிவிட முடியாது அப்படி நடித்துத்தான் தீர வேண்டுமென்று அவசியமும் இல்லை.

இப்படிப்பட்ட வார்த்தைகள், நட்சத்திரங்களுக்கும் தயாரிப்பாளர்களுக்கும் இடையில் இருக்கவேண்டிய நல்லுறவை பாதித்து விடும்.

இவ்வாறு நடிகை தேவிகா 'நவமணிக்கு' அளித்த பேட்டியில் கூறினுர்.



"அவளுக்கு நிகர் அவளே" படத்தில் வயோதிக கோலத்தில் தோன்றுவது யார் தெரிகிறதா? கல்யாண்குமார், நிர்மலாதான்.

## 'இதயக்கனி' வண்ணப் படத்தில் எம். ஜி. ஆருடன் இந்தி நடிகை ராதா சலூஜா நடிக்கிருர்

சத்யா மூவிஸ் ஆர். எம். வீரப்பன் தயாரிக்கும் 'இதயக்கனி' வண்ணப்படத்தில் எம். ஜி. ஆருக்கு இணையாக 'தோரஹா' புகழ் இந்தி நடிகை ராதா சலூஜா நடிக்கிருர்.

திரைகதையை புதுமையான சம்பவங்களோடு ஆர். எம். வீரப்பனே அமைத்துள்ளார்.

இதற்கான ஆரம்ப வேலைகள் துரிதமாக நடை பெற்று வருகின்றன.

'இதயக்கனி' படத்திற்காக மெல்லிசை மன்னர் விஸ்வநாதன் இசையமைப்பில் டி. எம். சௌந்திரராஜன், எஸ். பி. பாலசுப்பிரமணியம் பாடிய இரண்டு பாடல்கள் ஏவி. எம். ஒலிப்பதிவு தியேட்டரில் பதிவு செய்யப்பட்டன. படத்தில் இந்த இரண்டு பாடல்களும் எம். ஜி. ஆர், ராதா சலூஜா



சம்பந்தப்பட்ட காட்சிகளில் இடம் பெறுகின்றன.

கவிஞர் வாலி இயற்றியுள்ள இந்த இரண்டு பாடல்களில் ஒன்று —

"இதழே இதழே
தேன் வேண்டும்
இடையே இடையே
கனி வேண்டும்
இது போல் இன்னும்
நான் வேண்டும்
இன்பம் எல்லாமே
தர வேண்டும்"

என்று தொடங்குகிறது.

மற்ருெரு பாடல் —

"ஒன்றும் அறியாத
பெண்ணே
உண்மை மறைக்காத
கண்ணே
மாற்றுக் குறையாத
பொன்னே
மயங்குது நெஞ்சம்,
தயங்குது கொஞ்சம்"-

என்று தொடங்குகிறது.

இப்படத்தின் படப்பிடிப்பு வருகிற 27-ம் தேதியிலிருந்து தொடர்ந்து சத்யா படப்பிடிப்பு நிலையத்தில் நடைபெற இருக்கிறது. படப்பிடிப்பில் எம். ஜி. ஆரோடு ராதா சலூஜா, ஐசரிவேலன் நடிக்கும் காட்சிகள் படமாக்கப்பட விருக்கின்றன.

இளம் இயக்குநர் 'மணிப்பயல்' புகழ் ஏ. ஜகந்நாதன் பி. ஏ. இப்படத்தை இயக்கும் பொறுப்பை ஏற்றிருக்கிருர்.

ஜெகதீசன் உரையாடல்களை எழுதி வருகிருர்.

கலையை கங்கமுத்துவும் ஒளிப்பதிவை பாலகிருஷ்ணனும் கவனிக்கின்றனர்.

அடுத்த ஜனவரி பொங்கல் நன்னுளில் 'இதயக்கனி'யை வெளியிடத் திட்டமிட்டுள்ளனர்.

## கொள்ளிடத்தில் 'சுவாதி நட்சத்திரம்'

அசோக் பிக்சர்சுக்காக கே. எஸ். கோபாலகிருஷ்ணன் உருவாக்கும் 'சுவாதி நட்சத்திரம்' முடிவடையும் கட்டத்தில் உள்ளது.

இது ஒரு கறுப்பு- வெள்ளைப் படம் என்ருலும், வண்ணக் காட்சிகளும் இந்தப்படத்தில் இடம் பெறுகின்றன.

பார்வையற்ற ஓர் இளம் பெண்ணைப் பற்றிய கதை 'சுவாதி நட்சத்திரம் ஆனுல் அந்த பெண்ணே நிரந்தர குருடியல்ல. அவளுக்கு எப்போதாவது திடீர் என்று பார்வை வரும். வந்தது போலவே திடீர் என்று பார்வை போய்விடும். பார்வை பெறும்போது அவள் காண்பதெல்லாம் அழகு. இந்த காட்சிகளுக்காக ஊட்டி, ஏற்காடு, ஓகேனக்கல் முதலிய இயற்கை எழில் நிறைந்த இடங்களை இதற்காக கோபாலகிருஷ்ணன் பயன்படுத்தியுள்ளார்.

இப்போது கோபாலகிருஷ்ணன் குழுவினர், சீர்காழியை அடுத்த கொள்ளிடத்தில் படப்பிடிப்பு நடத்துவதற்காகச் சென்றிருக்கிருர்கள். அங்கே படப்பிடிப்பு முடிந்த பிறகு மைசூரிலும் படப்பிடிப்பு நடத்த திட்டமிட்டுள்ளனர்.

நடிப்புக்கு இலக்கணம் வகுத்த பத்மஸ்ரீ பானுமதி, கன்னியா ஸ்திரீயாக இது வரை ஏற்காத முற்றிலும் புதிய வேடத்தில் சுவாதி நட்சத்திரத்தில் நடித்துவருவது ஒரு தனிச் சிறப்பாகும். மற்றும் உதயசந்திரிகா, புதுமுகம் ரவிகுமார், மனேகர், சுருளிராஜன், பி. ஆர். வரலட்சுமி, சண்முகசுந்தரம் முதலியவர்கள் இதில் நடித்து வருகிருர்கள். ராமசாமி காமிரா வைக் கையாள்கிருர். ஜூன் மாதம் இந்தப் படம் திரைக்கு வருகிறது.



"சுவாதி நட்சத்திரம்" படத்தில் பானுமதி.





## 'பெயரைக்கெடுத்துக் கொள்ளாதே' சிவாஜிக்கு தந்தை அறிவுரை

பெரிய லட்சாதிபதியின் மகன் சேகர். மொட்டை மாடியில் காபி அருந்தியபடி எதிர் வீட்டு மாடியில் உடற்பயிற்சி செய்து கொண்டிருந்த பெண்ணை "உஸ் உஸ்" என்று கூப்பிடுகிருன். அவள் திரும்பி பார்க்கவில்லை. விசில் அடிக்கிருன். அவள் திரும்பிப் பார்க்கிருள்.

"குட் மார்னிங் —எக்சர்ஸைஸ் செய்து உடம்பை கும்கும்மாக வைச்சிருக்கே" என்கிருன் சேகர்.

அதற்குள் அவள் 'உங்கப்பா' என்று சைகை செய்கிருள்.

"ஓல்டுமேன். அப்பாவா? பாவம் தூங்கிக் கொண்டிருக்கிருர்" என்கிருன் சேகர்.

'தூங்க வில்லேடா' என்று அவன் தந்தை குரல் கொடுக்கிருர். "அப்பப்பா" என்று அவனுக்கு கைகால் உதறுகிறது.

"இதைப்போல எத்தனை எக்சர்ஸைஸ் பார்த்திருப்பே, உன்னைப்பத்தி எல்லோரும் சொல்லிருக்காங்க" என்கிருர் தந்தை.

"அப்பா! என் மேலே பொருமை பட்டவங்கதான் இல்லாததையும் பொல்லாததையும் சொல்ராங்க. வேறு ஒன்றுமில்லே"

'எல்லா குடும்பத்திலும் பிள்ளை, தகப்பன்பேரை எடுக்கணும்னு சொல்லுவாங்க, நீ என் பெயரையும் எடுக்க வேண்டாம், உன் பெயரையும் கெடுத்துக்க வேண்டாம். போ உள்ளே" என்று அதட்டுகிருர் தகப்பனுர்.

குகநாதனின் புதிய படத்தில் இக்காட்சியைக் காணலாம். பரணி ஸ்டூடியோவில் இடைவிடாமல் படப்பிடிப்பு நடந்துவரும் இப்படத்தில் தந்தை மகன் ஆகிய இரு வேடத்திலும் சிவாஜி கணேசன் நடித்தார்.

படத்தின் கதை வசனத்தை பாலமுருகன் எழுதியுள்ளார், கண்ணதாசன் பாடல்களுக்கு விஸ்வநாதன் இசையமைக்கிருர் பி.என். சுந்தரம் ஒளிப்பதிவை கவனிக்கிருர். இந்த வண்ணப்படத்தை பி. மாதவன் டைரக்ட் செய்து வருகிருர்.

## ரவிச்சந்திரன் நடிக்கும் தாய்வீட்டு சீதனம்

ரவிச்சந்திரன், விஜயா இணைந்து நடிக்கும் "தாய் வீட்டு சீதனம்" படப்பிடிப்பு தீவிரமாக வாகினி ஸ்டூடியோவில் நடைபெற்று வருகிறது.

மதுரை திருமாறன் கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிருர். எம். எஸ். காசி தயாரிக்கிருர்.

Printed by S.V.G. Sowrirajulu at the M. C. P. P. S. Press No. 4. South Bank Road, Madras-600028 and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Chief Editor: S. V. G. Sowrirajulu.

Honorary Editor: N. Muthukumarasami.

"சுவாதி நட்சத்திரம்" படத்தில் உதயசந்திரிகா.



"அன்புத் தங்கை" படத்தில் முத்துராமன், ஜெயலலிதா, ஜெயா.

## 'ஓடிப்போன கணவன்' படப்பிடிப்பு துவங்கியது

ஜெய்சங்கர் நடிக்கும் ஈஸ்வராலயாவின் "ஓடிப்போன கணவன்" படப்பிடிப்பு நேற்று துவங்கியது. நடிகை ஜெயசித்ரா கிளாப் அடித்து படப்பிடிப்பை ஆரம்பித்து வைத்தார்.

'விக்னேசுவரா..,விஞயகா கணபதி ஒரு குறையும் இல்லாமல் நல்லபடியாக எடுத்த காரியத்தை முடித்து வையப்பா...' என்று கூறியபடி ஜெய்சங்கர் பிள்ளையார் கோவில் முன்னுல் சாமி கும்பிடும் காட்சி முதலில் எடுக்கப்பட்டது.

அடுத்து ஜெயசித்ரா, மனேரமா, சோ, காத்தாடி ராமமூர்த்தி, டைப்பிஸ்ட் கோபு ஆகியோர் நடித்த காட்சிகள் படமாக்கப் பட்டன.

திரைக்கதை எழுதி டைரக்ட் செய்து கே. சண்முகம் இந்தப் படத்தைத் தயாரிக்கிருர். மா. லட்சுமணன் வசனம் எழுதுகிருர். குமாரதேவன் பாடலுக்கு குமார் இசையமைக்கிருர்.

## இதயங்கள் படத்தில் ஏ.எம்.ராஜா பாட்டு

"மனதுக்கு தெரியும் என்னை
மறந்ததில்லே நான் உன்னை
இதுவரை இலையுதிர் காலம்
இனிமேல் தளிர்விடும் கோலம்
கைமேல் உண்டான காயம்—
ஒரு
பொய்யால் உண்டான
மாயம்

வாலி இயற்றிய இந்தப் பாடலை ஏ. எம். ராஜாவும், ஜிக்கியும் பாடினர். ஏ. எம். ராஜா இசையமைத்தார். சக்தி கம்பைன்ஸ் இதயங்கள்' படத்திற்காக கற்பகம் ஸ்டூடியோவில் பாடல் பதிவு செய்யப்பட்டது.

எம். கிருஷ்ணன் டைரக்ட் செய்தார். திரிலோக் சந்த் போரா தயாரிக்கிருர்.